ஸ்ரீ:

# ஸ்ரீமத் ராமாயணம்

(ஸ்ரீ வால்மீகி ராமாயணத்தைத் தழுவியது)



(இலவச வெளியீடு)

# ஸ்ரீமத் ராமாயணம்

## (ஸ்ரீ வால்மீகி ராமாயணத்தைத் தழுவியது)



ஸ்ரீ ராமநவமி மஹோத்சவத்தை முன்னிட்டு
12.04.2011

சென்னை 44, குரோம்பேட்டை
தனுஷ்கோடி ஸ்ரீ கோதண்டராமன் ஸன்னிதியில்
வெளியிடப்பெற்றது

**இலவச வெளியீடு**

ஸ்ரீ :

# ஸ்ரீமத் ராமாயணம்

## தொகுப்புரை

"கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ" என்ற நம்மாழ்வாரின் வாக்குதான் உண்மைக்கு மாறாகுமோ !

இந்தியத் துணைக் கண்டத்தில் இராமாயண காவியத்தை அறியாதார் யாருமிலர். தெய்வீக முனிவரான வால்மீகியால் முதன் முதலில் சமஸ்கிருதத்தில் படைக்கப்பெற்ற இராமாயணத்தை தராசின் ஒரு தட்டிலும், நான்கு வேதங்களை மற்றொரு தட்டிலும் வைத்தால், இராமாயணத்தின் பக்கமே தாழ்ந்திருக்கும். காரணம், நான்கு வேதங்களிலும் குறிப்பிடப்பட்டுள்ள தர்ம சாஸ்திரங்களைக் காட்டிலும் வால்மீகி, தன் இராம காவியத்தில் அதிகமாகவே கூறியுள்ளார்.

இராமாவதாரம் பூர்ண அவதாரம் என்று பெரியோர்களால் போற்றப்படுகிறது. இக்காவியத்தில் அரச தர்மங்கள், குடும்ப தர்மங்கள், யுத்த தர்மங்கள் அனைத்தும் மிக விளக்கமாக எடுத்துக் கூறப்பட்டுள்ளதோடு, நடைமுறையில் அவை அனைத்தும் ஸ்ரீராமனின் வாழ்க்கையில் பின்பற்றப்பட்டுள்ளதை நாம் இராமாயணத்திலிருந்து அறியலாம்.

தனி மனிதன் வாழ்க்கையின் நெறி முறைகளைப் பின்பற்றி, தாய்–தந்தையருக்கு நல்ல மகனாக; கரம் பிடித்த இல்லாளுக்கு இனியவனாக ; பெற்ற பிள்ளைகளுக்கு நல்ல தந்தையாக; உற்றார் உறவினர்களுக்கு உதவுபவனாக; அல்லவைகளை அகற்றி நல்லவைகளை செய்பவனாக; சமுதாயக் காவலனாக விளங்கிட ஒவ்வொருவரும் இராமாயணத்தை படிக்க வேண்டும்; திரும்பத் திரும்பப் படிக்க வேண்டும். படிக்க இயலவில்லை என்றால்

இராமாயணத்தை பெரியோர்கள் வாயிலாக செவி மடுக்க வேண்டும். இராமாயணத்தைப் படித்தால் பரவசம்; சொன்னால் மகிழ்ச்சி; கேட்டால் இன்பம்; நினைத்தால் ஆனந்தம்.

கூட்டுக் குடும்பங்கள் சிதைந்து, "தனிக்குடுத்தனம்" என்ற சுயநலம் வளர்ந்துள்ள நிலையிலும், எங்கும் எதிலும் அவசரம் என்ற நிலையிலும், அடுக்கு மாடி வீடுகள் கலாசாரத்திலும் குழந்தைகள் இரவு நேரங்களில் முற்றங்களில் பாட்டியின் மடியில் தலை வைத்துப் படுத்து நிலவைப் பார்த்துக் கொண்டு, இராமாயணம், மஹாபாரதம் போன்ற காவியங்களைக் கேட்டு மகிழக்கூடிய, அவற்றை தங்கள் உள்ளங்களில் கொண்டு வாழ்க்கையை நெறியோடு அமைத்துக் கொள்ள இயலாத நிலையில் இந்த நெறிகெட்ட உலகில், குறிப்பாக நம்முடைய பகுதிவாழ் இளம் உள்ளங்கள் இராமாயணத்தை அருமையான படங்கள் 56 துணைகொண்டு, விரும்பிக் கற்றிட வேண்டும்; வாழ்க்கையை வளப்படுத்திக் கொள்ள வேண்டுமென்ற நல்ல எண்ணத்தின்பாற்பட்டு, நல்ல உள்ளங்களின் துணையோடு, இதனைத் தொகுத்து வெளியிடுகின்ற பேற்றினை யான் பெற்றமைக்காக பெருமகிழ்ச்சியடைந்து, வால்மீகி மாமுனிவரின் தாள் பணிந்து, இந்த அழகிய நூலினை அனுதினமும் நான் வணங்கும் ஸ்ரீ தனுஷ்கோடி கோதண்டராமனின் திருவடிவாரத்திலே சமர்ப்பிக்கிறேன்.

அனைவருக்கும் க்ஷேமம் உண்டாகட்டும்.

கோமடம் ஸ்ரீராமன்

குரோம்பேட்டை.
சென்னை-44
15-03-2011

– சுபம் –

# பொருளடக்கம்

ஸ்ரீ :

# 1. அயோத்தி மாநகர்

தலை சிறந்த முனிவரான நாரதர் விவரித்தவாறு, இரகு வம்சக் கதையை, போற்றி வணங்குதற்குரிய வால்மீகி முனிவர் இயற்றிட, அதனை இராமனுடைய உடலிலிருந்து தோன்றிய ஒரு மூலத்தின் இரண்டு பிம்பங்களாகப் பிரதிபலிக்கும் அரச வம்சத்தில் பிறந்த, புகழ்பெற்ற, கடமை உணர்வும் வாய்மையும் பெற்ற லவ – குசர்கள் கவனமாகவும் துல்லியமாகவும், கற்பிக்கப்பட்டவாறு பாடினர்.

பண்டைக் காலத்தில் உலகைத் தன்னுடையதாகக் கொண்ட, உயரிய ஆத்மாக்களைக் கொண்ட இக்ஷ்வாகு பரம்பரையில் உதித்த சிறந்த காவியமாக இராமாயணம் எழுந்தது.

தருமம், அன்பு, செல்வம் பற்றிய பாடங்களை உள்ளடக்கிய இராமாயண காவியம் எந்த ஒரு ஐயமும், வேற்றுமையும் இல்லாமல் கேட்கப்பட வேண்டும் என்பது நியதி.

சரயு நதிக்கரையில் மகிழ்ச்சியுடன் விரிந்து, பரவியுள்ள கோசல நாடு பெருமளவு வளங்களுடனும், தானியங்களுடனும் விளங்கியது. அதனுள், மனிதருள் முதன்மையான மனுவால் கட்டப்பட்ட, அனைத்து உலகங்களிலும் புகழ் பெற்ற அயோத்தி மாநகர் உள்ளது. சொர்க்கத்தில் இந்திரன் செய்தது போல, வல்லமை பொருந்திய தசரதன் இந்த நகரை நிர்மாணித்து, வளமாகவும் முன்னேற்றப் பாதையிலும் கொண்டு சென்றான்.

## 2. தசரத மன்னனின் புத்திரகாமேஷ்டி யாகம்

தசரத மன்னன், தன்னைத் தொடர்ந்து ஆள்வதற்கு வம்சத்தில் ஒரு மகன் இல்லையே என்று ஏங்கி, அதற்காக ஒரு யாகம் செய்ய வேண்டுமென்று தன் மனத்தில் முடிவு செய்து, குரு வசிஷ்டரையும், மற்ற தலைசிறந்த பிராமணர்களையும் அழைத்து புத்திரன் வேண்டி சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டுள்ளவாறு ஒரு யாகம் செய்ய விரும்புவதாகக் கூறினான்.

வசிஷ்டரை தலைவராகக் கொண்ட அவர்கள் அனைவரும் மன்னரின் விருப்பப்படி தங்கள் தங்கள் பணிகளைச் செய்து, யாகத்தை நடத்த ருஷ்யசிருங்கரும் வரவழைக்கப்பட்டார். சாஸ்திரங்களின்படி நடத்தப்பட்ட யாகத்தின் வாசனைப் புகையை சுவாசித்த மன்னன் அவனுடைய பாவங்களிலிருந்து விடுபட்டான்.

தசரதன் நடத்திய புத்திரகாமேஷ்டி யாக ஜ்வாலையிலிருந்து மிகுந்த பராக்கிரமும், பலத்தையும் உள்ளடக்கிய ஒளி பொருந்திய ஒரு மனிதன் தோன்றி, தெய்வீகப் பாயசத்துடன் கூடிய கலசத்தை தசரதனிடம் அளித்து, அவனுடைய மனைவியருக்குக் கொடுக்குமாறு பணிக்க, தசரதன் தன் மனைவியர்களுக்கு அதனைக் கொடுத்தான்.

அதிலிருந்து 12வது மாதம், வளர்பிறை 9வது நாள், சித்திரை மாதத்தில், அதிதியால் ஆளப்படும் புனர்வசு நட்சத்திரத்தில், ஐந்து கிரகங்களும் ஏறு முகத்தில் இருக்க, கர்க்கட லக்னத்தில், எல்லோராலும் வணங்கப்பட அனைத்து புனிதமான தெய்வீகக் குறிகளுடனும், தலைசிறந்த அதிர்ஷ்டத்தையும் கொண்ட விஷ்ணுவின் ஒரு பாதி பிரதிநிதியாக, இக்ஷ்வாகு வம்ச பரம்பரையை நிலை நிறுத்த, இராமனை கௌசல்யா ஈன்றெடுத்தாள்.

பராக்கிரமம் தவறாத பரதனை பூச நட்சத்திரத்தில், மீன லக்னத்தில் கைகேயியும், ஆயில்ய நட்சத்திரத்தில், கர்க்கட லக்னத்தில் இலஷ்மணன், சத்ருக்னன் என்று இரண்டு புதல்வர்களை சுமித்திராவும் ஈன்றெடுத்தனர்.

# 3. அரச குமாரர்களின் குருகுல வாசம்

தசரத மன்னனின் நான்கு உயரிய புதல்வர்கள், இயற்கையிலேயே நற்குணங்களும், உருவ ஒற்றுமையும், சமமான ஒளியுடனும் இருந்தார்கள்.

வசிஷ்டர் அளவற்ற பரவசத்துடன் கௌசல்யாவின் புதல்வனுக்கு இராமன் எனவும், கைகேயியின் புதல்வனுக்கு பரதன் எனவும், சுமித்திரையின் புதல்வர்களில் ஒருவனுக்கு இலட்சுமணன் எனவும் மற்றவனுக்கு சத்ருக்னன் எனவும் பெயர் சூட்டினார்.

செல்வச் செழிப்பைப் பெருக்கும் இலட்சுமணன், குழந்தைப் பருவத்திலிருந்தே, உலகத்தாருக்கு மகிழ்ச்சியை அளிக்கக் கூடிய தன் தமையன் இராமன்பால் மிகுந்த பற்று கொண்டு இராமனுடைய இன்னொரு ஆத்மா வெளியில் உள்ளது போல், இராமனுக்குப் பிடித்த செயல்களை மட்டுமே செய்தான். அதேபோல், இலட்சுமணனுடைய இளைய சகோதரன் சத்ருக்னன், பரதனிடம் தன் உயிரினைக் காட்டிலும் பிரியமாக இருந்தான். பிரும்மா, தேவர்களுடன் இருப்பதுபோல, தசரதன், தன்னுடைய அன்பான நான்கு புதல்வர்களுடன் பெரு மகிழ்ச்சியுடன் இருந்தான்.

நான்கு அரச குமாரர்களும் வில்வித்தை, யானை ஏற்றம், குதிரை ஏற்றம் போன்ற போர்க் கலைகளிலும் சிறந்த தேர்ச்சி பெற்று விளங்கி, அனைவராலும் விரும்பத்தக்கவர்களாக விளங்கினர்.

# 4. விஸ்வாமித்திரர் இராமனை அழைத்துச் செல்லல்

மன்னன் தசரதன் மகன்களின் திருமணம் பற்றி உறவினர்கள் மற்றும் அமைச்சர்களின் ஆலோசனைகளைக் கேட்டுக் கொண்டிருந்த போது, வன்மை பொருந்திய சிறந்த முனிவரான விஸ்வாமித்திரர் அங்கு வர, அவரை வரவேற்ற தசரத மன்னன் அவர் வருகைக்கான காரணத்தை வினவினான்.

சிறந்த சித்திகளை தான் பெற, மாரீசன், சுபாகு என்ற இரண்டு அரக்கர்கள் தடையாக உள்ளார்கள் என்றும், தான் யாகம் செய்யும் போது கோபத்தின் காரணமாக சாபம் எதுவும் தன்னிடமிருந்து வெளிவரக்கூடாது என்பது நியதியாதலால் அந்த அரக்கர்களை அழிக்க இராமனை அனுப்ப வேண்டுமென்று விஸ்வமித்திரர் கூறினார்.

முனிவரின் வார்த்தைகளைக் கேட்டு, தானே படையுடன் வந்து அரக்கர்களைக் கொல்வதாக மன்னன் கூறியதால் கோபம் கொண்டார் விஸ்வாமித்திரர். அரக்கர்களை வெல்லக் கூடிய ஆற்றல் கௌசிக முனிவருக்கே இருந்தாலும் மன்னனுடைய மகனின் நலனுக்காகவே அவர் இராமனை யாசிக்கிறார் என்று வசிஷ்டர் கூறியதைக் கேட்ட மன்னன் தசரதன் மன மகிழ்ச்சியுடன் இராமனுடன், இலட்சுமணனையும் விசுவாமித்திரரிடம் ஒப்படைத்தான்.

முதலில் விஸ்வாமித்திரர் செல்ல புகழ்மிக்க இராமன் தன் வில்லுடன் அவர் பின் செல்ல, இலட்சுமணன் அவர்களைப் பின் தொடர்ந்தான்.

# 5. தாடகை வதம்

அவர்கள் செல்லும் வழியில் உள்ள காடானது மிகவும் பயங்கரத் தோற்றத்துடன், யாரும் நுழைய முடியாத அளவில் இருப்பதைப் பார்த்து விஸ்வாமித்திரரிடம் இராமன், இது என்ன காடு என்று வினவினான்.

அது தாடகை வனம் என்றும், அறிவிற்சிறந்த சுந்தாவின் மனைவி தாடகையும், அவளுடைய மகன்கள் மாரீசன், சுபாகு ஆகியோரும் ஒன்றரை யோஜனை (12 மைல்) தூரத்தில் அந்த வனத்தில் வசிக்கிறார்கள் என்றும் விஸ்வாமித்திரர் கூறினார்.

மேலும் மிகவும் கொடூரமான தீச் செயல்கள் செய்பவளான யக்ஷியை கால்நடைகள் மற்றும் அந்தணர்களின் நலனுக்காகக் கொல்லுமாறு இராமனை விஸ்வாமித்திரர் பணித்தார்.

தாடகை கோபித்து எழுந்து, புழுதியை கிளப்பிக் கொண்டு இராம – லட்சுமணர்களை எதிர்நோக்கிச் சென்று கூக்குரலிட்டாள். அதிவேகமாக இராமனுக்கு எதிரில் வந்த தாடகையின் மார்பை இராமன் தன் அஸ்திரத்தால் துளைத்தான். அவள் கீழே விழுந்து மாண்டாள்.



# 6. மாரீசன் மூர்ச்சை அடைதலும், சுபாகுவின் வீழ்ச்சியும்

துறவிகளில் தலை சிறந்த விஸ்வாமித்திரர் தாடகையின் வதத்தினால் பெருமகிழ்ச்சி அடைந்தார். பின்னர் உள்ளும் புறமும் தன் புலன்களை அடக்கி, அவர் தீட்சையில் பிரவேசித்தார். ஆறாவது நாள், மாயக் கலைகள் பயின்ற மாரீசனும், சுபாகுவும் அங்கு விரைந்து வந்தனர்.

தாமரைக் கண்ணன் இராமன் அங்கு திடீரென்று உதித்த அரக்கர்களைக் கண்டு, மிகக் கோபமுற்று, மானவாஸ்த்ரம் என்ற தலைசிறந்த அஸ்திரத்தை மாரீசனின் மார்பில் சுழற்றி அடித்தார். அவன் கடலின் அலைகளிடையே வீசி எறியப்பட்டு, மூர்ச்சையடைந்தான்.

பிறகு ஆக்னேயாஸ்திரம் (அக்னி சம்பந்தமானது) என்ற தெய்வீக அஸ்திரத்தினை சுபாகுவின் மார்பில் எறிய, அதனால் அவன் துளைக்கப்பட்டு நிலத்தில் வீழ்ந்தான்.

விஸ்வாமித்திரரின் யாகங்களை அழிக்க வந்த அரக்கர்களைக் கொன்ற இரகுகுல திலகன் இராமன் அனைத்து முனிவர்களாலும் கௌரவிக்கப்பட்டான்.



# 7. அஹல்யை சாப விமோசனம்

மிதிலையின் மன்னர் ஜனகர் நடத்தும் தலைசிறந்த யாகத்திற்குச் செல்வதாகவும், அங்கே எல்லா வில்களிலும் தலைசிறந்த, அதிசயமான ஒரு வில் இருப்பதாகவும், இராமனும் தங்களுடன் வந்தால் அதைக் காணலாம் என்றும் விஸ்வாமித்திரர் கூறிட, இராம – லட்சுமணர்கள் அவரைப் பின் தொடர்ந்தனர்.

வழியில், சோணா நதிக்கரையில் அவர்கள் தங்கினார்கள். வனங்களால் சூழ்ந்த, செழிப்பாக இருந்த கிரிவிரஜ தேசத்தைக் கண்டு அந்த தேசத்தின் வரலாற்றையும், விஸ்வாமித்திரரின் வம்சத்தைப் பற்றியும் இராமன் வினவ, விஸ்வாமித்திரர் விவரமாகக் கூறினார்.

மேலும், மிதிலை செல்லும் வழியில் ஓர் ஆசிரமம் சூன்யமாயிருக்கக் கண்ட இராமன் அது பற்றிக் கேட்க, கௌதம முனிவரின் மனைவியான அஹல்யை இந்திரனின் தந்திரத்தால் களங்கப்பட்டதைத் தெரிவித்து, கௌதமரின் சாபத்தால் அஹல்யை மற்றவர்களின் கண்களுக்குப் புலப்படாத உருவில் காற்றை ஆகாரமாகக் கொண்டு அங்கிருப்பதையும், அவளின் சாபம் இராமனால் தீருமென்று கௌதமர் கூறியுள்ளதையும் விஸ்வாமித்திரர் கூறிட, உடனே இராம – லட்சுமணர்கள் அவ்வாசிரமத்தில் பிரவேசிக்க, அஹல்யா சாபம் நீங்கப் பெற்று கௌதமருடன் மீண்டும் இணைந்தாள்.



# 8. வைதேகி ஜனனம்

புத்திரபாக்கியமில்லாமல் வருத்தத்தில் இருந்த மிதிலையின் மன்னன் ஜனகனின் அரண்மனை நந்தவனத்தில் கலப்பையால் பூமியை உழுதபோது ஓர் அழகான பெண் குழந்தை இருப்பதைக் கண்டு ஜனக மன்னன் மிகவும் மகிழ்ச்சியுற்றான்.

தெய்வீக அருளாலேயே தனக்கு அக்குழந்தை கிடைக்கப் பெற்றது என்பதையும் அந்த மன்னன் உணர்ந்தான். அக்குழந்தைக்கு சீதை என்று பெயரிட்டு அன்புடனும், பாசத்துடனும் வளர்த்து வரலானான். கண்டவர் வியந்திட சீதையும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து சர்வ லட்சணங்களும் பொருந்திய தேவ கன்னிகை போன்று அழகுற விளங்கினாள்.

மன்னன் ஜனகனும் சீதைக்கு தக்க பிராயத்தில் மணம் முடிக்க முற்பட்டு, யார் தன்னிடமுள்ள சிவதனுசை நாண் ஏற்றுகிறார்களோ அவர்களுக்கே சீதையை அளிப்பேன் என்று பிரகடனம் செய்தான்.



# 9. சிவதனுசை இராமன் முறித்தல்

மிதிலை நகருள் விஸ்வாமித்திரர் பிரவேசம் செய்துள்ளதை அறிந்த ஜனகன், அவரை வரவேற்று உபசரித்து, அவருடன் வந்துள்ள இராம – லட்சுமணர்கள் பற்றிக் கேட்டறிந்து, சீதையின் சுயம்வரம் பற்றிக் கூறினான்.

விஸ்வாமித்திரர் இராமனை விளிக்க இராமன் ஆயிரம் பேர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே, வில்லை எடுத்து நாணைப் பூட்டி, வில்லினை வளைத்து நடுவில் உடைத்தான். ஜனக மன்னன் மிக்க மகிழ்ச்சியுற்றான்.



# 10. சீதா கல்யாணம்

ஜனக மன்னன் அழைப்பினை ஏற்று தசரத மன்னனும், அவனுடைய மனைவியர்களும், வசிஷ்டர் உட்பட அமைச்சர்களும் மிதிலை வந்தடைந்தனர்.

நல்லதொரு நாளில் இராமன் சீதையை மணம் முடித்தான். இலட்சுமணன் ஊர்மிளையையும், பரதன் மாண்டவியையும், சத்ருக்னன் ச்ருதகீர்த்தியையும் மணம் முடித்தனர். பின்னர் ஜனகனிடம் விடைபெற்று, முனிவர்கள் முன் செல்ல, படைகள் பின் வர, தன்னுடைய மகன்களுடன் தசரதன் அயோத்தி நோக்கிப் பயணமானான்.



# 11. பரசுராமன் சினம் தணிதல்

வழியில், ஜமதக்னியின் மகனான பரசுராமன் இராமனின் எதிரில் தோன்றி, "ஜமதக்னிக்குச் சொந்தமான வில்லினை வளைத்து, அம்பினைத் தொடுத்து, உன் வலிமையை நிலை நாட்டு" என்று கோபத்துடன் கூற, இராமன் பரசுராமன் கொணர்ந்த வில்லில் அம்பைப் பொறுத்தினான். இதைக் கண்டு, தன்னுடைய வீரம், இராமனின் ஒளியினால் அடக்கப்பட்டது கண்டு, ஆச்சரியமடைந்து, நிதானமான குரலில், "இந்த வில்லினை எடுத்து கையாளப்பட்டதைக் கண்டு, நான் உன்னை தேவர்களின் முதல்வன் என்றும், அழியப் படாதவன் என்றும், மது என்ற அரக்கனை அழித்தவன் என்றும் அறிகிறேன்" என்று கூறிட, நாணேற்றிய அம்பினை எய்திடல் வேண்டும் என்ற நியதியின்படி இராமனும் எய்திட, அதனால் பரசுராமனின் தவப் பயன்கள் யாவும் அழியப்பெற்று, அவரும் மகேந்திர மலை நோக்கிப் புறப்பட்டார்.

தசரத மன்னனும் தன் புதல்வர்களுடன் அயோத்தியை அடைந்தான்.

சீதையுடன் இராமன் பல பருவங்கள் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தான்.



# 12. கைகேயியின் சூழ்ச்சி

சிறந்த, தெய்வீக குணங்களைக் கொண்ட இராமனை இளவரசனாக்குவது குறித்து தசரதன் அமைச்சர்களுடன் கலந்துரையாடி, இராமனுக்குப் பட்டாபிஷேகத்திற்காக தக்க ஏற்பாடுகள் செய்ய ஆணையிட்டான்.

தசரதன் இராமனின் பட்டாபிஷேகத்திற்கு ஆணையிட்டுவிட்டு, கைகேயியின் அழகான அந்தப்புறத்திற்குள் நுழைந்தான்.

அரசன், தன்னுடைய உயிருக்கும் மேலாக அன்பு செலுத்தும் இளம் மனைவி தரையில் படுத்திருப்பதைக் கண்டான். கைகேயியை சமாதானப்படுத்திட, மன்னன் அவளுடைய தேவை என்ன என்று வினவியபோது, மந்தரையின் தீய போதனையால் சிந்திக்கும் ஆற்றலை இழந்த கைகேயி, பரதனுக்கு முடி சூட்ட வேண்டும் என்றும் இராமன் 14 ஆண்டுகள் காட்டுக்குச் செல்ல வேண்டும் என்றும் கோரினாள்.



# 13. இராமன் வனம் செல்லுதல்

தேரோட்டியின் மூலம் இராமன் வரவழைக்கப்பட்டான். வருத்தமுற்ற சக்ரவர்த்தி தசரதனால் பேசவும் முடியவில்லை, பார்க்கவும் முடியவில்லை, அவருடைய கண்களில் கண்ணீர் தளும்பியது.

இராமனைப் பார்த்து கைகேயி, முன்னொரு காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடந்த யுத்தத்தில் மன்னரைக் காப்பாற்றிய போது, மன்னர் தனக்கு இரண்டு வரங்கள் அளித்தார் என்றும், அந்த இரண்டு வரங்களின் பயனாக பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய வேண்டுமென்றும், இன்றைக்கே இராமன் தண்டகாவனத்திற்குப் புறப்பட வேண்டுமென்றும் அரசனிடம் தான் கேட்டுக் கொண்டதாகவும், இராமன் விரும்பினால் கொடுத்த வாக்கை காப்பவர்களாக தன்னையும், தன்னுடைய தந்தையையும் ஆக்கிக் கொள்ளலாம் என்றும் கூறினாள்.

கைகேயியின் வார்த்தைகளைக் கேட்ட இராமன், அவற்றை தன் தந்தையின் வார்த்தைகளாகவே எண்ணி, மிக்க மகிழ்ச்சியுடன் மரவுரி தரித்து, மான் தோல் உடுத்தி, சீதையுடனும் இலட்சுமணனுடனும் வனவாசம் புறப்பட்டான்.



# 14. இராமன் மக்களைப் பிரிதல்

வனவாசம் செல்லும் இராமனை நாட்டு மக்களும் பின் தொடர்ந்தனர். அவர்கள் தமசு நதிக் கரையை அடைந்தனர்.

இராமன் தன்னுடைய நாட்டு மக்களைப் பார்த்து, தனக்கு அளிக்கும் மரியாதைக்கும், அன்புக்கும் மேலே பரதனுக்கு அளிக்க வேண்டுமென்று அன்புக் கட்டளையிட்டான். பின்னர் நாட்டின் எல்லையை அடைந்து இரவு அனைவரும் நித்திரையில் ஆழ்ந்தபோது, அவர்களைப் பிரிந்து ச்ருங்கவேரபுரத்தை அடைந்தான்.



# 15. குகனைச் சந்தித்தல்

ச்ருங்கவேரபுரத்தை நோக்கிச் சென்ற இராமன், க்ரௌஞ்ச பட்சி மற்றும் கொக்கின் ஒலியுடன் கூடிய சமுத்திர ராஜனின் தேவியான கங்கையை அடைந்தான்.

அங்கு இராமன் குகனைச் சந்தித்தான்.

மறுநாள் காலை இராமன் சுமந்தரரை நகரத்திற்கு திரும்பிச் செல்லுமாறும், அப்போது தான் கைகேயியிக்கு தான் காட்டை அடைந்து விட்டது குறித்து உறுதி ஏற்படும் என்று கூறி, சுமந்திரனை திருப்பியனுப்பினான்.



# 16. குகன் உதவியால் ஆற்றைக் கடத்தல்

குகன் உதவியால், பட கில் அமர்ந்து, விரைந்து நதியை இராமன் கடந்தான்.

சூரியன் மேற்கு திசையை அடையும் நேரத்தில், யமுனையும், கங்கையும் சங்கமமாகும் இடத்தில், பரத்வாஜரை, இராம – லட்சுமணர்கள் சந்தித்தனர்.

பரத்வாஜர் இராமனை வரவேற்று, உபசரித்தார்.

இரவு கழிந்தபின், பரத்வாஜர் இராமனிடம், சித்திரகூடம் நோக்கிச் செல்லுமாறு கூறினார். அங்கு அபரிமிதமான கிழங்குகளும், பழங்களும் கிடைக்கும் என்றும் அந்த இடம் மகிழ்ச்சியைக் கொடுக்கும் என்றும் கூறிட, இராமன் சீதையுடன் கால்நடையாக ரம்மியமான சித்திரகூட மலையை அடைந்தான்.

அங்கே இலட்சுமணன், பல விதமான மரங்களைக் கொண்டு பர்ணசாலை கட்டிட, சர்வ லட்சணங்களும் கொண்ட இராமன், சீதையுடனும், இலட்சுமணனுடனும் அழகான ரம்மியமான பர்ணசாலையில் நுழைந்தான்.

# 17. தசரதன் உயிர் நீத்தல்

இடையில் தேரோட்டி சுமந்திரன் அயோத்தியை அடைந்தான். அரசனை வணங்கி, நடந்தவற்றைக் கூறினான். தேரோட்டியின் வார்த்தைகளைக் கேட்ட அரசன் கண்ணீர் மல்க, குரல் தழுதழுக்க, தேரோட்டியிடம், நெறிகெட்ட பிறப்பும் நோக்கமும் கொண்ட கைகேயியினால் தூண்டப்பட்டு, ஒரு பெண்ணின் மீதுள்ள மோகத்தால், நண்பர்களையோ அமைச்சர்களையோ, வேத நூல்களைப் படித்த வல்லவர்களையோ ஆலோசிக்காமல் தவறான நடவடிக்கை தன்னால் அவசரமாக மேற்கொள்ளப்பட்டது என்று புலம்பினான். இராமன் இல்லாமல் ஒரு நொடிப் பொழுதும் தன்னால் உயிர் வாழ முடியாது என்று புலம்பிக் கொண்டே தசரதன் வாழ்க்கையின் முடிவை எய்தினான் (உயிர் நீத்தான்).



## 18. பரதன் இராமனின் பாதுகைகளை வேண்டிப் பெறுதல்

பின்னர் இரவு கழிந்து, சூரியன் உதித்த பின்னர், அரசாங்க காரியங்களில் வல்லவர்கள் ஒன்றாகக் கூடினார்கள்.

வசிஷ்டரின் ஆணையை மேற்கொண்டு, தூதர்கள் வெகு துரிதமாக கிரிவ்ரஜா நகரத்தை அடைந்து பரதனையும், சத்ருக்னனையும் அழைத்து வந்தனர்.

பரதனைப் பார்த்து கைகேயி, "மகனே, இராமனுக்குப் பட்டாபிஷேகம் நடைபெற இருப்பதைக் கேட்டவுடன், நான் உன் தந்தையாரிடம் உனக்கு ராஜ்யம் கிடைக்க வேண்டுமென்றும், இராமனை நாடு கடந்த வேண்டுமென்றும் யாசித்தேன்" என்று கூற, அதைக் கேட்டு வெகுண்ட பரதன், "தந்தையை பிரிந்து, தந்தையைப் போலுள்ள சகோதரனைப் பிரிந்து, துக்கத்தினால் பீடிக்கப்பட்டு, அதிர்ஷ்டம் கெட்ட எனக்கு இந்த அரசினால் என்ன பயன் ?" என்று புலம்பினான்.

தந்தையாரின் ஈமச்சடங்குகள் முடிவுற்றபின், அரசை ஏற்க மறுத்த பரதன், சிறந்த ரதத்தில் அமர்ந்து, இராமனைப் பார்க்க ஆசைப்பட்டு, துரிதமாகக் கிளம்பினான்.

இராமனைப் பார்த்தவுடன் பரதன் கதறி, அரசர் உயிர் நீத்ததுபற்றிக் கூறினான். இராமனும் தன் சகோதரர்களுடன் தந்தைக்கு ஈமச் சடங்குகள் செய்து முடித்து, பரதனை சமாதானப்படுத்தி, தன் திருவடி பதித்த பாதுகைகளை பரதனின் விருப்பத்திற்கிணங்க கொடுக்க, பரதன் அயோத்தியை அடைந்தான்.

பிறகு, பரதன் பாதுகைகளுக்கு பட்டாபிஷேகம் செய்து, தனது தாய்மார்களை அயோத்தியில் இருக்கச் செய்து, இராமனின் வருகையை எதிர் நோக்கி நந்தி கிராமத்தில் வசித்தா ன்.

இராமனும், அத்ரி முனிவரின் ஆஸ்ரமத்தை அடைந்து அவரை வணங்கினான். அத்ரிமுனிவரின் மனைவி, துறவி அனுசுயா அன்புடன் சீதையை உபசரித்தார்.

# 19. இராமன் அகத்தியரை வனத்தில் சந்தித்தல்

அத்ரி முனிவரின் ஆஸ்ரமத்திலிருந்து தண்டகா வனத்தில் நுழைந்ததும், இராமன் துறவிகளின் பர்ண சாலைகளைக் கண்டான். துறவிகள் அவர்களை வாழ்த்துக்கள் கூறி வரவேற்றனர்.

பின்னர் சூரியனுக்கு நிகரான ஒளியைக் கொண்ட அகத்திய முனிவரின் ஆஸ்ரமத்திற்குச் சென்று, அவரை இராமன் இரு கைகள் கூப்பி வணங்கி நின்றான். துறவிகளில் முதன்மையானவரும் தர்மத்தை நன்கு அறிந்தவருமான அகத்தியர் எழுந்து, கைகளைக் கூப்பி அவர்களை வரவேற்று, உபசரித்து இந்திரனின் வஜ்ராயுதம் போன்ற சிறப்புடைய தெய்வீகமான மணிகளால் அலங்கரிக்கப்பட்ட வில்லை இராமனுக்கு அளித்தார்.

இரண்டு யோசனை தூரத்தில் (16 மைல்) கிழங்குகள், பழங்கள், தடாகங்கள், பலதரப்பட்ட மிருகங்கள் உள்ள மிக அழகான, "பஞ்சவடி" என்ற இடத்தில் உன்னுடைய இருப்பிடத்தை இலட்சுமணனின் உதவியோடு செய்து கொண்டு, உன்னுடைய தந்தையாரின் கட்டளையை துல்லியமாக நிறைவேற்றி சந்தோஷமாக வாழ்வாயாக என்று இராமனை அகத்தியர் வாழ்த்திட, இராமனும் பஞ்சவடி நோக்கிச் சென்றான். வழியில் இராமன் அதிக சக்தியும், பெரிய உடலையும் கொண்ட ஒரு கழுகை சந்தித்து, அது தன் தந்தையின் நண்பன் ஜடாயு என்று அறிந்தான்.

# 20. பஞ்சவடியில் இராமனும் சீதையும்

பின்னர் இராமன், சீதையுடனும், இலட்சுமணனுடனும் பஞ்சவடியை அடைந்தான். சக்ரவாகப் பறவைகளால் சூழப்பட்ட கோதாவரி நதிக்கரையில் அமைந்துள்ள பஞ்சவடி மிகவும் செழிப்பானதாகவும், சமவெளியாகவும், பூத்துக் குலுங்கும் மலர்களால் சூழப்பட்டும் மிகவும் ரம்யமாகக் காட்சியளித்தது.

அங்கே இலட்சுமணன் அழகானதொரு பர்ணசாலையை அமைக்க, மிகவும் மகிழ்ச்சியுடன் இராமன் சீதையுடன் அதில் வசிக்கலானான்.



# 21. சூர்ப்பணகை அங்கபங்கம்

தற்செயலாக அந்த இடத்திற்கு இராவணனின் சகோதரி சூர்ப்பணகை வர, நீல நிற தாமரை போல் அழகிய உருவத்தைக் கொண்ட இராமனைப் பார்த்து, காமத்தினால் பீடிக்கப்பட்டு, அவனை அடைய விரும்பினாள்.

அவளுடைய செயலை சிறிதும் ஏற்கமுடியாத இராமன் இலட்சுமணனிடம் உடனடியாக அவளை அங்கபங்கப்படுத்துமாறு கூற இலட்சுமணனும் சினம் கொண்டு, கத்தியை உருவி, அவளுடைய காதுகளையும், மூக்கையும் அறுத்து அங்கபங்கம் செய்தான். இதன் காரணமாக, அரக்கர்கள் கோபம் கொண்டு இராமனுடன் போர் புரிய, கர தூஷணர்களையும், அவர்களைத் தலைவர்களாகக் கொண்ட 14,000 அரக்கர்களையும் பெரிய யுத்தத்தில் இராமன் கொன்றான்.



# 22. இராவணனிடம் சூர்ப்பணகை முறையீடு

சூர்ப்பணகை உடனடியாக இலங்கை சென்று, இராவணனிடம் ஜனஸ்தானத்தில் 14,000 அரக்கர்களும், கர தூஷணர்களும் இராமன் ஒருவனால் கொல்லப்பட்டான் என்ற விவரத்தைக் கூறினாள்.

மேலும் அவள், இராம லட்சுமணர்கள் பற்றி வர்ணிக்கத் தொடங்கி, விதேக அரசனின் மகளும், இராமனுடைய மனைவியுமான அழகான சீதை உனக்கு தகுதியான மனைவி ; அந்த தேவதையை உனக்கு மனைவியாகக் கொண்டுவர வேண்டும் என்று முயன்றபோது, கொடூரமிக்க இலட்சுமணனால் அங்கஹீனம் செய்யப்பட்டேன் ; நீ அவளை மனைவியாக்கிக் கொள்ள விரும்பினால், உன்னுடைய பராக்கிரமத்தினால் அந்தப் பெண்ணை கட்டாயப்படுத்தி கொண்டு வா என்று கூறினாள்.



# 23. இராவணன் மாரீசனுக்குக் கட்டளையிடுதல்

சூர்ப்பணகையால் கிளர்ந்தெழுந்த இராவணன், உடனடியாக மாரீசனை அடைந்து, ஜனஸ்தானத்தில் கர தூஷணர்களையும், அரக்கர் படையையும் எவ்விதத் தூண்டுதலும் இல்லாமல் இராமன் கொன்றதோடு, தன்னுடைய சகோதரியின் காதுகளையும், மூக்கையும் அறுத்து அங்கஹீனப்படுத்தியதாகவும், எனவே அதற்கு பதிலடியாக இராமனுடைய மனைவியை அபகரித்துக் கொணர அவனுடைய உதவி தேவை என்று கூறினான்.

உண்மையான பராக்கிரமும் பெருந்தன்மையும் தர்மமே உருவானவனும் ஆகிய இராமன் தேவர்களுக்கு இந்திரன் எவ்வாறோ, அதேபோல் எல்லா உலகங்களுக்கும் அரசன் என்று மாரீசன் கூறினான்.

மாரீசன் இராமனின் பராக்கிரமத்தைப் பற்றி இராவணனிடம் பலமுறை எடுத்துக் கூறியும், அவற்றை இராவணன் ஏற்காததால் இறுதியில் இராவணனின் வார்த்தைகளுக்கு செவி சாய்த்தான்.



# 24. மாரீசன் மாய மானாக வருதல்

இராவணனின் ஆலோசனைப்படி, மாரீசன் தங்க மானாக மாறி, சீதையின் முன் பர்ணசாலை வாயில் அருகில் இங்குமங்கும் திரிந்தான்.

மலர்களைப் பறித்துக் கொண்டிருந்த சீதை, தங்க நிறத்தில் பளபளக்கும் மாய மானைப் பார்த்தாள்.

கள்ளம் கபடமில்லாத சீதை மாய மானால் ஈர்க்கப்பட்டு, மிகவும் மகிழ்ச்சியடைந்து, விளையாடுவதற்காக அதைப் பிடித்துத் தருமாறு இராமனிடம் வேண்டினாள். சீதையின் வார்த்தைகளைக் கேட்ட இராமன், இலட்சுமணனிடம் கவனமாகவும், ஆயுதம் ஏந்தியும் மைதிலியைப் பாதுகாக்கச் சொல்லிவிட்டு அந்த மானைப் பிடித்து வரப் புறப்பட்டான்.



# 25. இராவணன் பர்ணசாலைக்கு வருதல்

மாய மானான மாரீசன் இராமனை வெகுதூரம் பர்ணசாலையிலிருந்து இழுத்துச் சென்றான். இதைக் கண்டு இராமன் அதைக் கொல்ல பிரம்மாஸ்திரத்தை எய்த, இறக்கும் தருவாயில் மாய மான் உருவில் வந்த மாரீசன் "ஏ சீதா, ஏ லட்சுமணா" என்று இராமனின் குரலில் கூக்குரலிட்டான்.

இதைக் கேட்ட சீதை மிகவும் கலக்கமடைந்து பர்ணசாலையில் தனக்குப் பாதுகாப்பாக இருந்த இலட்சுமணனை இராமனைப் பார்த்துவர அனுப்பிட, இந்தத் தருணத்தைப் பயன்படுத்திக் கொண்டு, இராவணன் சன்னியாசி வேடம் கொண்டு சீதையின் இருப்பிடம் வந்தடைந்தான்.

வந்திருப்பவன் ஒரு பிராமணன் என்பதால் அவனை வரவேற்று, சிறிது நேரம் இளைப்பாருமாறும், வேண்டிய உணவு வகைகளை தனது கணவர் கொண்டுவந்தவுடன் புசிக்கலாம் என்றும் சீதை கூற, தான் புகழ்மிக்க இலங்கை அரசன் இராவணன் என்றும், தன்னைக் கணவனாக அடைய விரும்பினால், தனக்குரியவளாகலாம் என்றும் கூறி, தன் ஒரு கையால் சீதையின் கேசத்தையும், மற்றொரு கையால் அவள் தொடைகளையும் பற்றிக் கொண்டான்.

# 26. இராவணன் சீதையைத் தூக்கிச் செல்லல்

சீதை, துன்பத்தினால் பீடிக்கப்பட்டு 'ஓ ராமா' என்று கதறினாள். இராவணன் சீதையை தன்னுடைய விமானத்தில் தூக்கிச் சென்றான். அப்போது ஜடாயு (கழுகரசன்) ஒரு மரத்தில் அமர்ந்திருப்பதைக் கண்டு, அதனிடம் தான் தூக்கிச் செல்லப்படும் விவரத்தை இராமனிடம் கூறுமாறு சீதை கூறினாள்.

ஜடாயுவும், சீதையை மீட்க இராவணனுடன் கடும் போர் புரிந்து, இறுதியில் தன் இறக்கைகள் வெட்டப்பட்டு, கீழே விழுந்தது.

இராவணனும் ஆகாயமார்க்கமாக சீதையை தூக்கிச் சென்றான்.



# 27. ஜடாயு மோட்சம்

சீதையை இழந்த இராமன் கோபம் கொண்டு கூர்மையான, அதிபயங்கரமான அம்பை வில்லில் பொருத்தி, தனது சகோதரனுடன் சேர்ந்து வனம் முழுவதும் சீதையைத் தேடித் திரிந்தான்.

அப்போது தரையில் விழுந்து கிடந்த ஜடாயுவைப் பார்த்தான்.

ஜடாயு, அரக்கனோடு போரிட்டபோது அந்த அரக்கன் தனது இரக்கைகளை வெட்டி விட்டு, விதேக மன்னனின் புதல்வியான சீதையை தெற்கு நோக்கி எடுத்துச் சென்று விட்டான் என்று இராமனிடம் கூறி உயிரை நீத்தது.

பின்னர் இராமன் பறவைகளின் தலைவனான ஜடாயுவை கொழுந்து விட்டெரியும் தீக்கிரையாக்கி, கோதாவரி நதிக் கரைக்குச் சென்று நீராடி கழுகுகளின் தலைவனுக்கு சடங்குகள் செய்தான்.



# 28. கபந்தன் சாப விமோசனம்

இராம லட்சுமணர்கள் சீதையை தேடிச் செல்லும் போது மிகப் பெரிய பயங்கரமான, பயத்தை உண்டு பண்ணக் கூடிய, கைகளை வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் கபந்தன் என்னும் அரக்கனைக் கண்டார்கள்.

அந்த பயங்கர புஜபலம் கொண்ட அரக்கன் தனது கைகளை நீட்டி, வாயைப் பிளந்து இராம லட்சுமணர்களை விழுங்க முற்பட்டான்.

அவனுடைய இரண்டு கரங்களையும் இராம – லட்சுமணர்கள் வெட்டிட, அவன் மகிழ்ச்சியுற்று, தன்னை எரியூட்டுமாறும், அதன் பின்னர் தான் பழைய உருவை அடைந்து, சீதையைப் பற்றி சரியான தகவல் கொடுப்பதாகவும் கூற, இராமனும், இலட்சுமணனும் கபந்தனை எரியூட்டினார்கள். பிறகு சர்வ அங்கங்களாலும் அலங்கரிக்கப்பட்ட கபந்தன் மிகுந்த ஒளியுடன் வான் ரதத்தில் நின்று கொண்டு இராமனிடம் ரிஷ்யமுக பர்வதத்தில் வசிக்கும் சுக்ரீவனை நண்பனாக்கிக் கொள்ளுமாறும், அவன் சீதை இருக்குமிடத்தைக் கண்டு பிடிப்பான் என்றும் கூறினான். மேலும் வழியில் பம்பா நதிக்கரையில் மதங்க மஹரிஷி ஆஸ்ரமத்தில் சபரி என்ற பெண் துறவி இராமனின் வரவுக்காகக் காத்திருப்பதாகவும் கூறி, மறைந்தான்.

# 29. சபரி மோட்சம்

கபந்தன் காட்டிய வழியில், சுக்ரீவனைப் பார்க்கும் எண்ணத்துடன், இராமன் பயணத்தைத் தொடங்கி, பம்பா நதியின் மேற்கு எல்லையை அடைந்து, சபரியின் ஆஸ்ரமத்திற்குச் சென்று, அங்கு சபரியைக் கண்டான்.

பின்னர் சபரி, பம்பா நதிக் கரையிலிருந்து பெறப்பட்ட வனப் பொருட்களை அன்புடன் இராமனுக்குத் தந்து, இறுதியில் இராமன் அனுமதியுடன் மானிட உடலைவிட்டு, தூய்மையான துறவிகள் இருக்கும் இடம் செல்ல அனுமதி வேண்டிட, இராமனும் அனுமதி அளித்தபின், அக்னிப் பிரவேசம் செய்து, சபரி மோட்சமடைந்தாள்.



# 30. இராமன் சுக்ரீவனைக் காணுதல்

பம்பா நதியைக் கடந்து வந்த இராம – லட்சுமணர்களைக் கண்ட சுக்ரீவன், அவர்கள் யார் என்று அறிந்து வர அனுமனை அனுப்பினான்.

வானரங்களின் வீரமிக்க தலைவன் சுக்ரீவன் அவனுடைய சகோதரனால் ஏமாற்றப்பட்டு துக்கத்தினால் அங்கே சுற்றித் திரிகிறான் என்றும், அனுமன் என்ற பெயருடைய தான் அவனால் அனுப்பப்பட்டுள்ளதாகவும் அனுமன் இராமனிடம் கூறினான்.

இலட்சுமணனும் அனுமனிடம், வந்திருப்பவர் அயோத்தி மன்னர் தசரதனின் புதல்வன் இராமன் என்றும், நாட்டை இழந்து, வனத்தில் வசிக்கும்போது இராமனின் மனைவி சீதையை ஓர் அரக்கன் தூக்கிச் சென்றதையும், அந்த அரக்கன் பற்றிய விவரங்களை சுக்ரீவனிடம் அறிய வந்துள்ளதாகவும் கூறினான்.



# 31. அக்னி சாட்சியாக இராமனும், சுக்ரீவனும் நண்பர்களாகுதல்

பின்னர் இராம – லட்சுமணர்களை சுக்ரீவனுக்கு அனுமன் அறிமுகம் செய்து, விவரங்களைக் கூறினான். இராமனும் சுக்ரீவனும் ஒருவருக்கொருவர் நேசக்கரம் நீட்டினர்.

பிறகு இருவரும் கொழுந்து விட்டெரியும் நெருப்பை வலது புறமாகச் சுற்றி, நண்பர்களானார்கள்.

அனுமன் இராமன் பற்றிக் கூறிய விவரங்களைக் கேட்ட பின்னர், ஓர் அரக்கன் அலறிக் கொண்டிருக்கும் ஒரு பெண்ணைத் தூக்கிச் சென்றதாகவும், அவள் ‘இராமா, இலட்சுமணா’ என்று கதறியதால் அவள் தான் சீதா என்று தான் எண்ணுவதாகவும், அவள் அப்போது தங்களை நோக்கி வீசிய மேலாடையையும் ஆபரணங்களையும் பார்த்தால் அவளை அறிந்து கொள்ள முடியும் என்றும் சுக்ரீவன் கூறி, அவற்றை இராமனிடம் அளித்தான். அவை சீதையின் ஆபரணங்களே என்று அறிந்த இராமன் புலம்பினான்.

சீதையைத் தேடிக் கண்டுபிடிக்க சுக்ரீவன் உதவுவதாகவும், வாலியைக் கொன்று சுக்ரீவனை அரியணையில் அமர்த்த இராமன் உதவுவதாகவும் வாக்களித்தனர்.

# 32. வாலி மோட்சம்

“வானர ஸ்ரேஷ்டனே, நட்பின் பலன் உதவுவது என்று எனக்குத் தெரியும். உன்னுடைய மனைவியை எடுத்துச் சென்ற வாலியை கண்டிப்பாக வதம் செய்வேன்” என்ற இராமனின் அருமையான வார்த்தைகளைக் கேட்ட சுக்ரீவன், மகிழ்ச்சியடைந்தான்.

சுக்ரீவன், வாலி – துந்துபி யுத்தத்தின் போது வாலி இறந்து விட்டதாகக் கருதி குகை வாயிலை தான் மூடிவிட்டதால், கோபம் கொண்ட வாலி தன்னை அடித்துத் துரத்தி விட்டு, தன் மனைவியையும் அபகரித்துள்ளதாகவும், சாபம் காரணமாக வாலி ரிஷ்யமுகபர்வத எல்லைக்குள் வரமாட்டான் என்பதால் தான் அங்கு தங்கியுள்ளதாகவும் கூறினான்.

இராமனும் துந்துபியின் எலும்புக்கூட்டை, கால்கட்டை விரலால் தூக்கி எறிந்தும், 7 சால மரங்களை ஓர் அம்பால் துளைத்தும் சுக்ரீவனுக்கு நம்பிக்கையூட்டினான்.

பின்னர் சுக்ரீவன் வாலியை போருக்கு இழுக்க, இராமனும் அந்தப் போரில் வாலியைக் கொன்று, சுக்ரீவனுக்கு மகுடம் சூட்டினான். வாலி மைந்தன் அங்கதன் இளவரசனாக்கப்பட்டான்.



## 33. சம்பாதி சீதை இருக்குமிடத்தைக் கூறுதல்

மழைக்காலம் முடிந்தபின்னர், சுக்ரீவன் ஆணையிட, வானரப் படைகள் அனைத்து திசைகளிலும் சீதையை தேடிக் கண்டுபிடிக்க விரைந்தனர். அனுமனின் திறமையைக் கண்ட இராமன், அவனே சீதையைக் கண்டுபிடிக்கக் கூடியவன் என்று தீர்மானித்து, அவனிடம் கணையாழியை அடையாளமாகக் கொடுத்து அனுப்பினான்.

விந்தியமலைக் காடுகளில் அனுமன், அங்கதன் மற்றும் அவர்களின் படைகள் சீதையைத் தேடி களைப்புற்று, தண்ணீர் பருகிட மயனால் நிர்மாணிக்கப்பட்ட மாளிகையினுள் செல்ல, ஸ்வயம் பிரபா என்ற பெண்ணால் அங்கு விருந்தளிக்கப்பட்ட பின், அங்கிருந்து வெளியேற்றப்பட்டு, கடற்கரையை அடைந்து, தங்கள் முயற்சி தோல்வியடைந்து விட்டதென்று எண்ணி, இறக்கும் வரை நோன்பு இருக்க முடிவு செய்தனர்.

அத்தருணத்தில் அவர்கள் ஜடாயுவின் பெருமை பற்றியும், இராவணனிடம் ஜடாயு போரிட்டு இறந்தது பற்றியும், பிறகு இராமனால் மோட்சம் அடைந்ததையும் பேசிக்கொண்டு இரு ந்தனர். இதைக்கேட்ட ஜடாயுவின் சகோதரன் சம்பாதி அங்கு வந்து மேலும் விவரங்களைக் கேட்டறிந்த போது, அவன் மூலமாக சீதை இலங்கையில் அசோக வனத்தில் இராவணனால் சிறை வைக்கப்பட்டுள்ளதை அறிந்தனர்.

# 34. அனுமனே கடலைக் கடக்கும் வல்லமை பொருந்தியவன்

இலங்கை சென்று சீதாபிராட்டியைத் தேடிக் கண்டுபிடிக்க முதலில் கடலைக் கடக்க வேண்டுமென்றும், அதற்கான தகுதி யாரிடம் உள்ளது என்று வினவியபோது, அனைத்து வானர வீரர்களும் தங்களால் கடலைக் கடக்கமுடியாது என்று கூறினர்.

ஜாம்பவானும், அங்கதனும் தங்களால் 800 மைல் தூரத்தை தாண்டிச் செல்ல முடியும், ஆனால் திரும்பி வரமுடியுமா என்பது ஐயமே என்று தெரிவித்தார்கள். இறுதியில் ஜாம்பவான், இந்தக் கடலைக் கடந்து சென்று, திரும்பி வரக் கூடிய ஆற்றல் அனுமனுக்கே உண்டு என்று தெரிவித்தான்.

அனுமனின் ஆற்றல் சிறு வயதிலிருந்தே எவ்வாறு இருந்தது என்று ஜாம்பவான் வர்ணித்தான்.



# 35. அனுமனின் ஆற்றல்

அனுமன் அஞ்சனா தேவிக்கும் - வாயு பகவானுக்கும் பிறந்தவன் என்றும், சிறிய குழந்தையாக இருந்த போது காலையில் சூரியன் உதயமாகும் நேரத்தில், அவனது ஒளியை சிவந்த பழம் என்று கருதி அதைப் பிடிக்க 24 ஆயிரம் மைல்கள் பறந்து சென்றதையும், அதைக் கண்ட இந்திரன் தன்னுடைய வஜ்ராயுதத்தால் தாக்கிய போது, அவனுடைய இடது தாடையில் காயம் ஏற்பட்டு, இப்போதும் அதன் வடு இருப்பதையும் சொல்லி, அதனால் 'அனுமன்' என்ற பெயர் வந்தது என்றும் கூறினான். இந்திரன் செயலைக் கண்டு வாயு பகவான் தான் பணி செய்வதை நிறுத்தியதால் அனைத்து உலகங்களும் ஸ்தம்பிக்க, பிரம்மா தலைமையில் தேவர்கள், வாயுவிடம் வந்து, உன்னுடைய குழந்தையை யாராலும் வெற்றி கொள்ள முடியாது; எந்த அஸ்திரத்தாலும் கட்டுப்படுத்த முடியாது என்று வரமளித்து சமாதானப் படுத்தியதையும் கூறி, உன்னுடைய பலத்தை நீ வெளிக் கொணர் என்று அனுமனிடம் ஜாம்பவான் கூறினான்.

பின்னர் அனுமன் தன்னுடைய பலத்தில் நம்பிக்கை கொண்டு, உடனே பெரிய உருவம் எடுத்து வானரப் படைகளுக்கு மகிழ்ச்சியளித்தான். பின்னர் மகேந்திர பர்வதத்தின் மீது அனுமன் ஏறி, தன் மனதை ஒருநிலைப்படுத்தி, தன் குறிக்கோளை எய்த ஆயத்தமானான்.

# 36. அனுமன் ஓய்வெடுக்க மைநாக பர்வதம் கடலிலிருந்து வெளிவருதல்

வாயு புத்திரனான அனுமன் சீதாபிராட்டியை தேடிக் கண்டுபிடிக்க வேண்டுமென்ற இலக்கினை மட்டும் மனதில் கொண்டு, அதிவேகமாக கடலைக் கடக்கலானான். அப்போது, சமுத்திரராஜன் கடலடியில் உள்ள மைநாக பர்வதத்தை பார்த்து பராக்கிரமச் செயல் புரியும் அனுமன் உன்மேல் நின்று ஓய்வெடுக்க உதவிடுவாயாக என்று கூறிட, மைநாக பர்வதமும் அனுமன் எதிரில் தோன்றிட, தன்னை தடுக்க வருவதாகக் கருதி, அதனை தன் மார்பினால் அனுமன் தாக்கினான். உடனே மைநாக பர்வதம் மனித உருவெடுத்து, யாராலும் செய்ய முடியாத காரியத்தை செய்யும் அனுமன் தன்மீது அமர்ந்து சிறிது ஓய்வு எடுத்து, பயணத்தை தொடரலாமென்றும், சகரர்கள் செய்த உதவிக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் அந்த வம்சத்தில் வந்த இராமனுக்கு உதவிட தன்னை சமுத்திரராஜன் அனுப்பியுள்ளான் என்றும் அனுமனிடம் கூறியது.

சீதா பிராட்டியை கண்டுபிடிக்கும் வரையில் தன்னால் ஓய்வு எடுக்க முடியாது என்று சொல்லி, மைநாக பர்வதத்தை தன் கரங்களால் தொட்டுவிட்டு, அனுமன் தன் பயணத்தைத் தொடர்ந்தான்.



# 37. சுரசா என்ற நாகமாதா அனுமனைத் தடுத்தல்

கடலைக் கடந்து கொண்டிருக்கிற வாயு புத்திரனான அனுமனை பெரிய மலை போன்ற அரக்கி உருவெடுத்து, சிறிது தடை செய்திடு என்று தேவர்கள் கூறிட, நடுக்கடலில் பயத்தை உருவாக்கும் பெரிய அரக்கி உருவம் எடுத்த சுரசா அனுமனை சுற்றி வளைத்து, பிரம்மாவினால் தனக்கு அளிக்கப்பட்ட வரத்தினால், தன் முன்னால் வரும் எவரையும் தான் விழுங்கிட முடியும் என்று கூறி, தனது பெரிய வாயைத் திறந்தாள். அனுமன், அவளிடம் இராமனைப் பற்றி எல்லா விவரங்களையும் கூறி, தான் சீதையைத் தேடிச் செல்வதாகவும், சீதையைக் கண்டுபிடித்த பிறகு, அவளுடைய வாயில் நுழைவதாகவும் சொல்ல, அதை அவள் அனுமதிக்கவில்லை.

அனுமனை விழுங்க சுரசா தனது வாயை மிகப் பெரிதாக திறந்த சமயத்தில், அனுமனும் தன்னை அதற்குச் சமமாக வளர்த்துக்கொண்டு, திடீரென்று தனது உருவத்தை கட்டைவிரல் அளவுக்கு சிறிதாக்கிக் கொண்டு, சுரசாவின் வாய்க்குள் சென்று உடனே வெளி வந்தான். பின்னர் சுரசா சுய உரு எடுத்துக் கொண்டு அனுமனை ஆசீர்வதித்து, அவனுடைய காரியம் வெற்றியடைய வாழ்த்தினாள்.



## 38. அசோக வனத்தில் சீதையைக் காணுதல்

அனுமன், இலங்கையை அடைந்து, தன் உருவத்தை சுருக்கிக் கொண்டு, பொழுது சாய்ந்த பின் இலங்கை நகருக்குள் நுழைந்தான். அப்போது இலங்கை நகரமே ஒரு பெண் உருவம் கொண்டு அனுமனைத் தடுத்தது. தான் இலங்கையை சுற்றிப்பார்க்க வந்ததாக அனுமன் சொல்ல, அதை ஏற்காமல் அவள் அனுமனை அடிக்க, அனுமனும் அவளை ஓர் அரை அரைய அவள் கீழே சாய்ந்தாள். அப்போது "குரங்கினால் தான் அடிபட்டு விழும் சமயம்தான், இலங்கைக்கு அழிவு" என்ற பிரம்மாவின் சொல் அவள் நினைவிற்கு வந்தது.

அனைத்து இடங்களிலும் சுற்றித் திரிந்து கடைசியில் அனுமன் அசோகவனத்திற்கு வந்தான். சீதையைக் கண்டான். அத்தருணத்தில் இராவணன் அங்கு வந்து சீதையை மிரட்டி தன் வசம் வரவேண்டும் என்று நிர்பந்தித்தான். இரண்டு மாத அவகாசமும் கொடுத்தான்.

இதை அனுமன் ஒரு பெரிய சிம்சபா மரக்கிளையில் அமர்ந்து கொண்டு கவனித்தான்.



## 39. அனுமன் கணையாழியை சீதையிடம் அளித்தல்

இராவணன் சென்ற பின்னர் சீதைக்கு கேட்கும் விதத்தில் இராமனைப் பற்றியும், சீதை அபகரிக்கப்பட்டது பற்றியும் சுக்ரீவன் நட்பு பற்றியும், பிராட்டியை தேடிக் கண்டுபிடிக்க தான் அனுப்பப்பட்டுள்ளது பற்றியும் இனிமையாகக் கூறினான்.

இதைக் கேட்ட சீதை, பேராச்சரியம் அடைந்து, சிம்சபா மரத்தைப் பார்த்தாள். அங்கு அனுமனைக் கண்டாள். உண்மையாகவே ஸ்ரீராமனின் தூதுவன் என்றால், இராமனைப் பற்றியும், அவருடைய குணாதிசயங்களைப் பற்றியும், அவர் அங்க அடையாளங்கள் பற்றியும் கூறுமாறு சீதை அனுமனைப் பணிக்க, அனுமன் இராமனின் அங்க அடையாளங்களையும், இலட்சுமணனின் அங்க அடையாளங்களையும் சொல்லி, சீதைக்கு நம்பிக்கையூட்டுவதற்காக இராமன் கொடுத்த கணையாழியையும் காண்பித்தான்.

தன்னுடைய கணவனின் கைவிரலை அலங்கரித்த கணையாழியைக் கண்ட சீதை அகமகிழ்ந்து, தன்னுடைய கணவனே நேரில் வந்தது போன்று எண்ணி, கணையாழியை அனுமன் கரங்களிலிருந்து எடுத்துக் கொண்டாள்.

எவ்வாறு எல்லோராலும் கடலைக் கடந்து வரமுடியும் என்ற சந்தேகம் சீதாதேவிக்கு வர, அதற்கு அனுமன், வானரப் படையிலேயே தான் சாதாரணமானவன் என்றும், அதனால்தான் தூதுவனாக அனுப்பப்பட்டுள்ளதாகவும், மற்றவர்கள் எல்லோரும் தன்னைவிட பராக்கிரமம் மிக்கவர்கள் என்றும், இராம - லட்சுமணர்களை தன் தோளில் சுமந்து கொண்டு இலங்கைக்கு வர உள்ளதாகவும் சீதாதேவியிடம் கூறினான்.

சீதாதேவிக்கு நம்பிக்கை ஏற்பட்டு, தனக்கும் இராமனுக்கும் மட்டுமே தெரிந்த காகாசுரனின் விருத்தாந்தத்தையும், காகாசுரனின் ஒரு கண்ணை இராமன் பிரம்மாஸ்திரத்தினால் பறித்ததைப் பற்றியும் சொல்லி, அதை இராமனிடம் கூறும்படிச் சொன்னதோடு, உயர்ந்த மதிப்பிட முடியாத சூடாமணியைக் கழற்றி அனுமனிடம் கொடுத்து, அதை இராமனிடம் சேர்ப்பிக்க வேண்டும் என்று கூறினாள்.

# 40. இலங்கையை அனுமன் தீக்கிரையாக்குதல்

சீதையிடமிருந்து விடைபெற்ற அனுமன் இலங்கையை அழிக்க முற்பட்டான். அரக்கர் படையையும், படைத் தலைவர்களையும் அழித்து இந்திரஜித்தின் பிரம்மாஸ்திரத்தால் கட்டப்பட்டு இராவணன் அவைக்கு அனுமன் அழைத்து வரப்பட்டான். இராவணன் அனுமனைக் கொல்ல வேண்டும் என ஆணையிட்டான். உடனே விபீஷணன் எழுந்து, தூதுவனைக் கொல்வது தவறு என்றும், அதற்கு பதிலாக அங்கஹீனம் செய்து அனுப்பலாம் என்று கூற, இராவணன் அதனை ஏற்றுக் கொண்டு அனுமனின் வாலில் தீ வைக்கும்படி ஆணையிட்டான். பின்னர் இராவணனின் ஆணைக்கிணங்க அனுமனின் வாலில் தீயூட்டிட, அனுமனும் அந்தத் தீயினால் இலங்கை நகரையே அழித்து, மீண்டும் சீதா பிராட்டியைக் கண்டுவிட்டு, இலங்கையிலிருந்து திரும்பலானான்.



# 41. "சீதையைக் கண்டேன்" எனக் கூறி சூடாமணியை அனுமன் இராமனிடம் அளித்தல்

இராமனை மீண்டும் அடைந்த அனுமன் தலைகுனிந்து, நமஸ்கரித்து, "சீதையைக் கண்டேன்" என்று சொன்னதும், அமிர்தம் போன்று அவ்வார்த்தைகளைக் கேட்டு இராமனும் இலட்சுமணனும் மகிழ்ச்சியுற்றனர்.

பின்னர் இராமனின் வேண்டுகோளின்படி, சீதையைக் கண்டது பற்றிய விவரங்களை அனுமன் விவரித்துக் கூறி, சீதாபிராட்டியின் அணிகலனான சூடாமணியை அவரிடம் சேர்ப்பித்தான். அதனைத் தன் மார்பிலே அணைத்துக் கொண்டு, அது இந்திரனால் கொடுக்கப்பட்டு, தனது மாமனாரால் சீதைக்குக் கொடுக்கப்பட்டது என்று இராமன் கூறினான்.

ஸ்ரீராமன் கேட்டுக் கொண்டதற்கிணங்க அனுமன் இலங்கையைப் பற்றியும், அதன் மதிள்சுவர்கள், கோட்டைகள், அரக்கர் படைகள், குதிரைகள், யானைகள் பற்றியும், பாலங்கள் பற்றியும் விவரமாக இராமனிட ம் கூறினான்.

இராமனின் கட்டளைப்படி எல்லா வானரர்களும், கரடிகளும் அணிவகுத்து தெற்கு நோக்கிச் சென்று இந்துமாக்கடலை அடைந்தனர்.

## 42. விபீஷணன் சரணாகதியும், பட்டாபிஷேகமும்

இதற்கிடையில் சீதையை இராமனிடம் ஒப்படைப்பதே நல்லது என்று பலமுறை விபீஷணன் கூறிய அறிவுரைகளை இராவணன் ஏற்காததால், விபீஷணனும், அவனுடைய பராக்கிரமம் மிக்க நான்கு அமைச்சர்களும் இராமனைச் சரணடைந்தனர்.

இராமனும், "தன்னிடம் ஒருவன் தஞ்சம் புகுந்தான் என்றால் அவனைக் காப்பாற்றுவேன், ஆகையால், நமக்கு இணையாக நம்முடைய மத்தியில் விபீஷணன் வந்து சேரட்டும்" என்றான்.

இராமனின் வார்த்தைகளைக் கேட்ட விபீஷணன் மிகவும் மகிழ்ச்சியுற்று, இராமனின் திருவடிவாரத்தில் சாஷ்டா ங்கமாக விழுந்து நமஸ்கரித்தான்.

இராவணனைக் கொன்று விபீஷணனை அரசனாக்குவேன் என்று இராமன் கூற; இலங்கைக்குள் அதிரடியாகச் செல்ல தன்னால் முடிந்த உதவிகளைச் செய்வதாக விபீஷணன் கூற, அவனைத் தழுவிக் கொண்டு, உடனடியாக கடலிலிருந்து நீரைக் கொண்டு வந்து, அரக்கர்களின் தலைவனாக விபீஷணனுக்கு மகுடம் சூட்ட இராமன் இலட்சுமணனைப் பணிக்க, இலட்சுமணனும் விபீஷணனுக்கு பட்டாபிஷேகம் செய்து வைத்தான்.



# 43. வீபீஷணனின் யோசனைப்படி கடலரசனை இராமன் வேண்டுதல்

விபீஷணனின் யோசனைப்படி, இராமன், கடலைக் கடந்து இலங்கை சென்றிட வேண்டிய உதவிகள் செய்யுமாறு கடலரசனை வேண்டினான்.

அதற்காக இராமன் தர்ப்ப சயனத்தில் கையை தலைக்கு அணையாகக் கொண்டு படுத்துக் கொண்டான். மூன்று இரவுகள் கழிந்தன. சமுத்திர ராஜன் இராமன் முன் தோன்றவில்லை. எனவே இராமன் வெகுண்டு இலட்சுமணனைப் பார்த்து, “இன்று இந்த சமுத்திரத்தை வற்ற வைப்பேன், என்னுடைய வில்லையும், அம்புறாத் தூணியையும் கொண்டு வா” என்றான்.



# 44. கடலரசன் கடலைக் கடக்க வழி சொல்லுதல்

இராமன் சினமுற்று, தன் வில்லில் பிரம்மாஸ்திரத்தைத் தொடுத்து கடலைப் பார்த்து, "உன்னை நான் இன்று பாதாள லோகம் வரை வற்ற வைப்பேன்" என்று சொன்னவுடன், சமுத்திர ராஜன் வெளிப்பட்டு, கை குவித்து, "பஞ்ச பூதங்கள் சுய ரூபத்தில் இருக்க வேண்டுமாதலால் நானும் அப்படியே இருக்க வேண்டும். இதை நான் மீற முடியாது, இருந்தாலும் உங்களுக்கு இந்தக் கடலைக் கடக்க வழி சொல்கிறேன்" என்றான்.

தொடுத்த பிரம்மாஸ்திரம் வீணாகாமல் இருக்க, வடக்கு திசையில் ஆபீரர்கள் தண்ணீரைக் குடித்து வற்றடிக்கிறார்கள், அவர்களை என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை, அவர்களை அழிக்க எய்தலாம் என்று சமுத்திரராஜன் சொல்ல, இராமனும் அவ்வாறே பிரயோகித்து அவர்களை அழித்தான்.



# 45. சேது பந்தனம்

கடலரசன், விஸ்வகர்மாவின் மகனான நளனுக்கு அவனுடைய தந்தையாரால் அளிக்கப்பட்ட வரத்தினால், அவன் ஒரு பாலத்தை இந்தக் கடலில் கட்ட முடியும் என்றும் அதைத் தான் தாங்குவதாகவும் கூறினான்.

நளனும் முதல் நாள் 14 யோசனைகள் தூரமும் (112 மைல்) ; இரண்டாம் நாள் 20 யோசனைகள் தூரமும் (160 மைல்) ; மூன்றாம் நாள் 21 யோசனைகள் தூரமும் (168 மைல்) ; நான்காம் நாள் 22 யோசனைகள் தூரமும் (176 மைல்) ; ஐந்தாம் நாள் 23 யோசனைகள் தூரமும் (184 மைல்) பாலத்தை கட்டி முடித்தான்.

பாலத்தின் அகலம் 80 மைல்கள், நீளம் 800 மைல்கள். இதைப் பார்த்து தேவர்களும் கந்தர்வர்களும் ஆச்சரியமுற்றனர்.

அனுமன் இராமனையும், அங்கதன் இலட்சுமணனையும் தூக்கிக் கொள்ள, வானரப் படைகளுடன் அவர்கள் கடலை கடந்து, எதிர் கரையை அடைந்தார்கள்.



# 46. அங்கதன் தூது

இராமன் அங்கதனை வரவழைத்து, இராவணனிடம் தூதுவனாகச் சென்று, சில அறிவுரைகளைக் கூறிடுமாறு பணிக்க, அவனும் அப்படியே இராவணனிடம் தெரிவித்தான்.

சீதையை இராமனிடம் ஒப்படைக்காவிட்டால் கொல்லப்படுவாய் என்று அங்கதன் தெரிவிக்க, இதனால் வெகுண்டெழுந்த இராவணன் நான்கு அமைச்சர்களைக் கூப்பிட்டு அ ங்கதனைக் கொல்லுமாறு பணிக்க, அவர்களும் அங்கதனைப் பிடிக்க, ஒரு பறவை பறப்பது போல் அங்கதனும் இராவணனின் மாளிகையிலிருந்து நான்கு அமைச்சர்களையும் தூக்கிக் கொண்டு புறப்பட்டு தன் உடலை குலுக்க, அந்த நால்வரும் இராவணன் முன்னிலையில் கீழே விழுந்தனர். அங்கதனும் திரும்பி வந்து இராமனிடம் நடந்தவற்றைக் கூறினான்.



# 47. இராம-லட்சுமணர்கள் இந்திரஜித்தின் நாகாஸ்திரத்தால் கட்டுப்பட்டு, கருடனால் விடுவிக்கப்படல்

போர் மூண்டது. இராம – லட்சுமணர்களால் பல படைத் தலைவர்களும், அரக்கர் படையும் அழிந்தது கண்ட இராவணன், மகன் இந்திரஜித்தை போர்க்களத்திற்கு அனுப்பினான். கடும் போரில், அவன் அங்கதனால் தோற்கடிக்கப்பட்டான். இதனால் வெகுண்ட இந்திரஜித் மாயப் போர் புரிந்து, இராமனையும், இலட்சுமணனையும் நாகாஸ்திரத்தால் கட்டிட, அவர்களும் மயங்கி கீழே விழுந்தனர். அவர்கள் இறந்து விட்டார்கள் என்று எண்ணி, இந்திரஜித்தும் இலங்கை சென்றடைந்தான்.

தன்னுடைய ஆத்ம பலத்தால் சுயநினைவிற்கு வந்த இராமன், அருகே சுயநினைவில்லாமல் கிடக்கும் இலட்சுமணனைப் பார்த்து மிகவும் வருத்தப்பட்டான். அத்தருணத்தில் கருட பகவான் வந்து, நாகாஸ்திரத்திலிருந்து இராம லட்சுமணர்களை விடுவித்து, "போரில் வெற்றி கண்டு, சீதையை மீட்பாய்" என இராமனை வாழ்த்தி, விடைபெற்றார்.



# 48. கும்பகர்ணனை எழுப்புதல்

இராம – லட்சுமணர்கள் இந்திரஜித்தின் நாகாஸ்திரத்திலிருந்து விடுபட்டது கேட்டு இராவணன் பல்வேறு தளபதிகளையும், பிரகஸ்தனையும் போருக்கு அனுப்ப, அவர்கள் அனைவரும் அழிய, தானே மிகப் பெரிய படையுடன் போர்க்களம் வந்தான். இராவணனுக்கும் இலட்சுமணனுக்கும் பெரிய யுத்தம் நடந்து, இராவணன் இலட்சுமணன் அம்புகளால் பீடிக்கப்பட்டு மயக்கமுற்றான். பின்னர் நினைவு தெளிந்து, கோபமுற்று, பிரும்மாவினால் அளிக்கப்பட்ட ஓர் ஆயுதத்தை இலட்சுமணன் மேல் எய்திட, அவன் கீழே விழுந்தான். ஹிமயவானையும், மந்திர மலையையும், மேரு மலையையும், மூன்று உலகங்களையும் அசைத்த இராவணனால் இலட்சுமணனைத் தூக்க முடியவில்லை.

இலட்சுமணன் கீழே விழுந்ததைக் கண்டு அனுமன் மிகுந்த கோபத்துடன் இராவணனை அடிக்க, அவனும் கீழே விழுந்து எழுந்தான். பின்னர் அனுமன் தோள்களிலே இராமன் நின்று கொண்டு இராவணனுடன் போர் புரிந்து, எல்லா ஆயுதங்களையும் இராவணன் இழக்க, "நாளை போருக்கு வா" என்று இராமன் பணிக்க, அவனும் வெட்கத்துடன் இலங்கை சென்றான்.

உடன் தனது அரக்கர் படையை அழைத்து கும்பகர்ணனை எழுப்ப உத்தரவிட்டான். அவர்களும் எல்லா இசைக் கருவிகளுடன் சென்று, மிகவும் கஷ்டப்பட்டு, கும்பகர்ணனை எழுப்பினர்.

# 49. கும்பகர்ணன் வதம்

இராவணனால் பணிக்கப்பட்ட கும்பகர்ணன் போர்க்களம் நோக்கி வருவதைக் கண்ட வானரப் படைகள் அஞ்சி இங்குமங்கும் ஓடின. அங்கதன் அவர்களுக்கு தன்னம்பிக்கையூட்டி அஞ்சாமல் இருக்கும்படிச் செய்தான்.

விபிஷணன் கும்பகர்ணன் பற்றி இராமனுக்கு விவரமாகத் தெரிவித்தான். இராமனுக்கும் கும்பகர்ணனுக்கும் மிகப் பெரிய யுத்தம் நடைபெற்றது. இறுதியில் இ ந்திராஸ்திரத்தை இராமன் கும்பகர்ணன் மீது எய்திட, அது அவன் தலையை அறுத்து, தரையில் வீழ்த்தியது.



# 50. அனுமன் சஞ்சீவினி மலையைக் கொணர்தல்

கும்பகர்ணன் போரில் கொல்லப்பட்டதையடுத்து இராவணனின் மகன்களான த்ரிசரா, அதிகாயன், நராந்திகன் ஆகியோரும் கொல்லப்பட்டனர். அதனால் மீண்டும் இந்திரஜித் போர்க்களம் புகுந்து, வானத்தில் மறைந்து, வானரர்களை அழித்தான். மேலும் இராம – லட்சுமணர்களும் இந்திரஜித்தின் அம்புகளால் அடிக்கப்பட்டு, மயக்கமுற்று கீழே விழுந்தனர்.

ஜாம்பவான் யோசனைப்படி அனுமன் இமாலயத்தை அடைந்து சஞ்சீவினி மூலிகை மலையையே கொண்டுவர, அதன் வாசனையை முகர்ந்து இராம – லட்சுமணர்களும், உயிரிழந்த வானரர்களும் மீண்டு எழுந்தனர்.



# 51. இந்திரஜித் வீழ்ச்சி

இதையடுத்து இராவணனால் அனுப்பப்பெற்ற கும்பன், நிகும்பன் ஆகியோர் சுக்ரீவன் மற்றும் அனுமனால் கொல்லப்பட, இந்திரஜித் மீண்டும் மாயப் போர் புரியத் தொடங்கினான். மாய சீதையை உருவாக்கி, அவளைக் கொன்று இராமனுக்கு கிலேசத்தை உண்டு பண்ணிட, விபீஷணனால் இறந்தது மாய சீதை என்று இராமன் அறிந்து ஆறுதல் பெற்றான்.

இடையில் அக்னி தேவதைக்கு யாகம் செய்து, இந்திரனாலும் வெல்ல முடியாத பராக்கிரமத்தை இந்திரஜித் அடைவதற்கு முன்னர் அவன் அழிக்கப்பட, இராமனின் ஆசி பெற்று இலட்சுமணன் நிகும்பளா சரணாலயம் சென்று கடுமையான போரில் இந்திராஸ்திரத்தை தன் வில்லில் தொடுத்து இந்திரஜித்மேல் எய்திட, அவனும் மாண்டான்.



# 52. இலட்சுமணன் இராவணனால் அடிபட்டு விழுதல்

இந்திரஜித் போரில் இறந்த செய்தி கேட்டு வெகுண்டெழுந்த இராவணன் கடுமையான போர் புரிந்தான். விபீஷணன் மீது கோபம் கொண்டு இடி போன்ற ஈட்டியை எய்தியபோது, அதை இலட்சுமணன் தன்மீது வாங்கிக் கொண்டு, தரையில் விழுந்தான். உடனே சுசேனன், அனுமனிடம் மஹோதய பர்வதம் சென்று மூலிகைகள் கொண்டு வருமாறு வேண்டிட, மீண்டும் அனுமன் துரிதமாகச் சென்று மூலிகை மலையினையே கொண்டுவர, தேவையான மூலிகைகளின் சாற்றை இலட்சுமணன் நாசியில் செலுத்த, இலட்சுமணன் விழித்தெழுந்தான்.

இராமனும், வானரப் படைகளும் மகிழ்ச்சியுற்றனர்.



## 53. இராம-இராவண யுத்தம் - இராவணன் வீழ்தல்

இலட்சுமணன் வேண்டுகோளுக்கிணங்க, இராவணனைக் கொல்ல இராமன் வில்லேந்தி போரிடப் புறப்பட்டான். இராமன் தரையிலும், இராவணன் தேரிலும் நின்று போரிடுவதைக் கண்டு இந்திரன் தன் தேரை இராமனுக்குத் தர, அதில் நின்று யுத்தம் செய்தான் இராமன். கடுமையான, அற்புதமான போர் நிகழ்ந்தது. அகத்திய முனிவர் அப்போது அங்கு வந்து இராமனுக்கு ‘ஆதித்ய ஹ்ருதயம்’ என்ற ஸ்லோகத்தை போதிக்க, அதை மூன்று முறை ஜபித்து, இராவணனுடன் போர் புரிந்து, இறுதியாக பிரும்மாஸ்திரத்தை எய்தி, இராவணன் மார்பைப் பிளந்திட, இராவணன் கீழே விழுந்து, இறந்தான்.



# 54. சீதா பிராட்டி அக்னிப் ப்ரவேசம்

இராவணன் வீழ்ச்சியால் மூவுலகமும் மகிழ்ச்சியுற்றது. தேவர்கள் பூமாரிப் பொழிந்தனர். இராமனின் வேண்டு கோளுக்கிணங்க, இந்திரன், இறந்த வானரர்களையும் கரடிகளையும் உயிர்ப்பித்தான்.

இராமனின் ஆணைப்படி விபீஷணனுக்கு இலட்சுமணனால் பட்டாபிஷேகம் செய்யப்பெற்றது. பின்னர் விபீஷணன், சர்வ அலங்காரங்களுடன் சீதா பிராட்டியை இராமனிடம் அழைத்துவர, இராமன் அவளை ஏற்றுக்கொள்ள மறுத்ததால், இராமனின் எண்ணத்தைப் புரிந்து கொண்ட பிராட்டி, இலட்சுமணனை தீ மூட்டச் சொல்லி, அக்னிப் பிரவேசம் செய்தாள்.

அக்னி பகவான் சீதா பிராட்டியை, அக்னிப் பிரவேசம் செய்த அதே நிலையிலேயே கொண்டு வந்து, எல்லோர் முன்னிலையிலும் இராமனிடம் அளிக்க, இராமனும் சீதை அப்பழுக்கற்றவள் என்று சொல்லி, ஏற்றுக்கொண்டான்.



# 55. ஸ்ரீ ராமர் பட்டாபிஷேகம்

ஸ்ரீராமனின் ஆணைப்படி விபீஷணன் எல்லா வானரர்களையும் கௌரவித்தான். சுக்ரீவன், விபீஷணன் மற்றும் எல்லா வானரர்களையும் அழைத்துக் கொண்டு, புஷ்பக விமானத்தில் சீதாபிராட்டி, இலட்சுமணனோடு ஏறி, வரும் வழியில் அனைத்து இடங்களையும் சீதைக்குக் காண்பித்து, சீதையின் விருப்பத்திற் கிணங்க கிஷ்கிந்தையில் இறங்கி தாராவையும் மற்றவர்களையும் அழைத்துக் கொண்டு, பரத்வாஜ ஆஸ்ரமத்தை அடைந்தான் இராமன்.

அங்கிருந்து அனுமனை உடன் சென்று பரதனிடம் தன் வரவு பற்றி அறிவிக்குமாறு பணித்துவிட்டு, பின்னர் புஷ்பக விமானம் மூலம் பரதன் இருப்பிடம் சென்றடைந்தான்.

பரதன் இராமன் திருவடிகளில் விழுந்து வணங்கி, இராமனின் பாதுகைகளை அவரிடம் சமர்ப்பித்து, அரசையும் இராமனிடம் ஒப்படைத்தான்.

வசிஷ்டரை முதன்மையாகக் கொண்டு இராமர் பட்டாபிஷேகம் இனிதே நடைபெற்றது. அனைவரும் மகிழ்ச்சியடைந்தனர்.



## 56. அனுமன்பால் பிராட்டியின் கனிவு

ஸ்ரீராமன், பட்டாபிஷேகம் முடிவுற்றவுடன் சுக்ரீவனுக்கு தேவலோக ஸ்வர்ண மாலையையும், அங்கதனுக்கு வைரம் - முத்துக்கள் பதித்த இரண்டு கடையங்களும் அளித்தார். சீதாபிராட்டிக்கு மிகுந்த விலையுயர்ந்த முத்து மாலையை அளித்தார். அனைவருக்கும் பரிசுகளை வழங்கினார்.

சீதாபிராட்டி அனுமனின் சேவைகளை நினைந்து, அவருக்கு ஸ்ரீராமர் தனக்கு அளித்த முத்து மாலையைத் தர எண்ணி, இராமனைப் பார்க்க, ஸ்ரீராமனும் அனுமதியளிக்க, மிகுந்த மகிழ்ச்சியுடன் சீதை அதனை அனுமனுக்குக் கொடுக்க, அனுமனும் அதை வாங்கி அணிந்து கொள்ள, வெள்ளி மலையில் சந்திரன் பிரகாசிப்பது போன்று தோன்றினான்.

இராமன் 11000 ஆண்டுகள் நாட்டை ஆண்டார். அவர் ஆட்சிக் காலத்தில் எல்லோரும் நோய் நொடியின்றி, பயமின்றி, செல்வச் செழிப்புடன், மகிழ்ச்சியாக வாழ்ந்தார்கள்.

யார் இல்லத்தில் வால்மீகியால் இயற்றப்பட்ட இராமாயணப் புத்தகம் உள்ளதோ, அங்கே அனைத்துத் தடைகளும் நீங்கும் ; யார் இராமாயண காவியத்தைக் கேட்கிறார்களோ அவர்கள் எல்லா பாவங்களும் நீங்கப்பெற்று, நீண்ட ஆயுள் பெறுவர்.

- சுபம் -



ஸ்ரீ வால்மீகி மஹரிஷி

